# பிக்ஷாடன நவமணிமாலைக் குறிப்புரை.

பிக்ஷா அடனம் - பிட்சை எற்றல்; அடனம் - ஏற்றல்.

க. தாழ்ந்தனள்-விடை யின்மையிற் கீழ்ப்பட்டாள், தோற்றவர் வென்றவரை வணங்குதல் இயல்பாகலின் வணங்கினாள், தனக்கும் வெற்றரையென்பதுணர்ந்து தலைகுனிந்தாள், பிட்சாடனரைப் பிரியமனமின்றித் தங்கினாள். தாழ்தல் - கீழ்ப்படுதல், வணங்குதல், குனிதல், தங்குதல்.

உ. குன்றா முதுகுன்றுடையான் - அழியாதபழமலைநாதர், குன்றாகிய பழமலைநாதர். அருள் குன்றாதவனுமாம்; வளங்குன்றாத முதுகுன்றுமாம். இலாதவெண்கோவணத்தான் என்பது நக்கன் என்னும் பொருட்டாய்க் "கழிந்தபற்றுடை வசிட்டன்" என்றாற்போல நின்றது. இரண்டத்தனை-சிறுமையைக் குறித்தற்குக் கூறுமெண்ணளவு, இரண்டாகிய அவ்வளவு. கோடி – கொள், புதிது. என்றிட்டனள் - என்றுகூறினாள்; ஒருசொன்னீர்மைத்து; என்றுகூறிப் பிச்சையிட்டாள்.

ங. எப்பாத்திரம் - சற்பாத்திரம், அசற்பாத்திரம், பிட்சாபாத்திர முதலியன.

ச. உமை-உம்மை, உமாதேவி. வீடு-இல்லம், மோட்சம், ஆட்டி னின்பால் இது வேண்டுவைகொல்லென எனமாறுக.

ரு. தலையைக் கிள்ளு மியல்பினரென்பதோராது இவர் சொல்லை நம்பினளே இவளறியாமை இருந்தவாறென்னையென்று சிரித்தது என்க; நகுதலை என்பது.

சு. வினைதல் - செய்தல். சக்கரம் - மட்சக்கரம், கண்ணாகிய அரம். சக்கு-கண். குயத்தி - குயச்சாதிப்பெண். தனங்களையுடைய பெண், இளமையுடையபெண், அல்குற்றேரையுடைய பெண். குயவன் என்பதற்கும் ஏற்ற பெற்றி சிறிது விகற்பித்து இப்பொருள்கள்கொள்க. முதுகுன்று இறை இயம்ப - பழமலையார் விடைகூற, பழமலைநாதர்கூற. சிற்றிடைச்சி - சிறியஇடையினை யுடையாள், சிறியஇடைச்சாதிப்பெண். ஓர் - அறி, ஒரு.

எ. வண்டு - வளையல். எங்கே - எமதுகரம், எமது சார்பு. செட்டிமங்கையர் தங்கட்கு என்பது இனி வைசியப் பெண்களாய்ப் பிறக்கும் இருடிபத்தினிகளாகிய தங்கட்கு எனவும் பொருடோன்ற நின்றமைகாண்க. கூடல் - புணர்தல், மதுரை.

அ. ஊருக்குள் பிச்சை - நகரத்தின் கண்பலி. மற்றொன்று இடக்கரடக்கல்; அதற்கு ஊர்-தொடை. மற்றொருவர்-உமாதேவியார், தங் கணவர். அது யாருக்குக்கிட்டும் - அவ்வூருக்குட் பிச்சை எவர்க்குங்கிட்டாது. சோறு நீர்கொளும்-அவ்வுண்மையைச் சொல்லுகின்றோம் நீர் ஏற்றுக்கொள்ளும், சோற்றையும் நீர் ஏற்றுக்கொள்ளும்.

அதற்கு உளர் மற்றொருவர் யாருக்குக்கிட்டும் அது சோறும் நீர்கொளும் என்பதனை மற்றொருவர் அதற்கு உளர் யாருக்குக் கிட்டும் அது சோறு நீர் கொளும் என மாற்றிப் பிறர் எவர்க்குங்கிடையாது உமக்கே கிடைக்கும் அவ்வூர்க்குட் பிச்சையையும் சோற்றையும் நீர் ஏற்றருளும் எனமற்றொரு பொருளுங் கொள்க.

கூ. சழங்கல் - சரிதல். பகற்போது விழுங்கும் அன்னம் கொள்வாய் என்று வேண்டினள், எனவே இராப்போது மனையில் மனம் வழங்குவன் என்றாள் என்பது குறிப்பெச்சம்.

பிக்ஷாடனநவமணிமாலைக் குறிப்புரை முற்றிற்று.

# பெரியநாயகியம்மை
## நெடுங்கழிநெடிலாசிரியவிருத்தக் குறிப்புரை.

---

க. ஊடறணியுமாறு தேவியைப் பெருமான் வணங்குங்கால் தேவிமுகாம்புய மலர்தலின் அவரைக் கொடியாக உருவகஞ் செய்தார். முழுமணி - இலக்கண முற்றுமமைந்த நீலமணி. கனல்மழு - வினைத்தொகை; கனலும் மழுவும் என உம்மைத் தொகையுமாம். சிலம்பு - மலை. தினமணி - சூரியன். மாசுணம் ஆய்-பெரும்பாம்பு போன்று. ஆதல் - உவமவுருபிடைச் சொல்.

உ. வரைகழையென மாற்றுக. உருத்திரைந்து - உருவந்திரைந்து, உருத்து இரைந்து என்க.

ஙூ. தடுத்தல் - வென்று உரிகவர்தலின்மேற்று. உரிபோர்த் தடுத்தவெனப் பாடங்கொண்டு கண்ணழிக்கில் மோனை நயமின்மை தேர்க. இம் மணிமுத்தநதி எலும்பிடப்படுமென்றுதானும் எலும்பையணியும் தெய்வத்தன்மை பொருந்திய நதியாகி இந்நதிபோலவே அன்னங்கொண்டு மெய்வெளுப்ப இருத்தலால் அக்கங்கையை இகழ்ந்து இயம்பும் கீழ்மையொன்றும் இல்லை யென்பீராயின் (கீழ்மையடையாமை மாத்திரத்தானே) இதன்குணம் அதற்குக் கிடைக்குமோவெனக் கூறும்படி கிளர்நதியென்க. அணிதல் - இடப்படுதல். அன்னம் - பிண்டமும், அன்னப் பறவையுமாம். இதன் குணம் சிதசாரூப மளித்தலாதியன. இருந்து - வினையெச்சத்திரிபு.

ச. கொச்சை - சீர்காழியையும், திருத்தமுறுச் சொல்லையும்; எட்டி - எட்டிமரத்தையும், தாவியென்னு மெச்சத்தையும்; திகிரி - மூங்கிலையும், சக்கரத்தையும்; வாங்குதிரை - வளைந்த திரையையும், தாவுங்குதிரையையும்; கொடுமரம் - வலிய மரத்தையும், வில்லையும் உணர்த்தின.

ரு. மலம் மாயை தவிடு உமி என்பன் கிரனிறை. பாகம் - மலபரிபாகத்தையும், சமைத்தலையும்; அருத்தல் - சிவபோத முளைத்தெழாது அர்ப்பித்தலையும், உண்பித்தலையுங் குறித்தன.

சு. விருத்தகிரிக்கண் மாய்வனவாகிய உயிர்கள் பெறுஞ்செயலால் நாடின்நும் மூர்க்கு நவின்ற அம்முறையே நீவிருள்ளீர்; ஆகலின், எவ்வுயிர்க்கும் நீவிர் தந்தையுந்தாயும் அல்லிர்; என நிந்தாஸ்துதியின் வைத்து அத்தலத்திலருளுமாறு நிகழ்த்தியவாறு. ஒருவனென்றது சன்னமுனிவரை.

எ. பாய்சுருட்டல் பாற்கடலொலியினும் இவ்வொலி மிக்கிருத்தலாலென்க.

அ. கொடுத்து - பழமலைநாதராற் கொடுக்கப்பெற்று. குளத்தினிற்கொடுத்தது எனஇயையும். குளமென்பது - நெற்றியையும் கமலாலயதீர்த்தத்தையும் சுட்டியது. நெற்றியிற் கண்தருதல் - சிவசாரூபமளித்தல்.

கூ. கொள்ளல் - ஏற்றல். ஆடலவாகி இங்கு இதன்கண் அடையா ஆடி அமர்வுறவெனவும், செ க ண் டை ட குதிப்ப எனவும் இயையும்.

கய. புலி மானைத்தொழுது மருவியிருத்தலால் அம்மான் தனதினமாகிய பசுக்கள் தன்பாங்கரடைந்து தன்னால் அப்புலியைப் பயமற எய்தப்பெற்றதாயிற்று என்றறிந்து அப்பசுக்களெல்லாம் அம்மானால் அப்புலியை அடையப்பெறுகின்றன வென்றது, திருவருட் சத்தியானே ஆன்மாக்கள் சிவத்தையடைய வேண்டுமென்னும் சித்தாந்தநோக்கி யென்க. தனதென்றது சத்தியையும், சாதிகளென்றது ஆன்மாக்களையுமாம். தேவியார்முன் கங்கையின் பெயரையுஞ் சொல்லாத கடவுள், அத்தேவியார்க்கு எனது புகழை எடுத்துக் கிளக்குமென்று ஆரவாரித்து அக்கங்கைபோலத் தான்மறையாது வெளிப்பட்டு விளங்கும் இந்நதியென்றலும் அத்தலமான்மியங் குறித்தென்க.

**பெரியநாயகியம்மை நெடுங்கழிநெடிலாசிரிய விருத்தக் குறிப்புரை முற்றிற்று.**

# பெரியநாயகியம்மை
## கலித்துறைக் குறிப்புரை.

---

க. இறுமாப்பனென அரன் அனைப் பெறவுற்றனை என்க.

உ. இருத்தி அகற்றுமென இயையும். செஞ்சிலை - ஈண்டு அம்பி. மதி - அறிவு, சந்திரன்.

௩. புனலும் முக்காற்பொறுக்கும் வழக்குண்மையின் இழை பொறுத்தலாதியனவும் புலவரால் பொறையெனக் கூறப்படினும் அவை பொறையன்று; இப்பிழை பொறுத்ததே நற்பொறையென்பது. மழை - குளிர்ச்சி.

௪. பொய்யன்றென்பதற்குப் பொய்யல்லை யாம்படியென்க; யான் சொல்வது பொய்யல்ல என்றலுமாம்.

ரு. வணங்கில் சுற்றும் கிழிக்கும்படும் ஆகலின் பின்வாங்கி நில் என்றபடி. நல் - மேரு.

௬. முதிர்வேனிலில் என்பது தாப்பிசையாய்நின்றது.

எ. உடன் சொல்லாமையால் நின்போல அருளாளர் இலரென்றுகூறச் செய்தனை என்பது.

அ. செச்சைமலர் புரைவாளேடு சொல் என்க.

க0. கதை யான்கூறுவேன்; அதற்குக் காரணம் எனக்கு விளக்குக என்பது. ஏதுவென்பதற்கு எப்பொருளெனலும் ஒன்று.

கக. முலைவிலை - பரிசத்தொகை.

கஉ. பெண்ணொழித்ததென்பது - மக்களென்னும் பொது மொழி ஆண்பாலையே உணர்த்திற்றென்பது. என்பாரொடு சொல்பவர் நாணவென இயையும். தான் - முயற்சி.

க௩. ஏது வென்பது காரணப்பெயரெனவும், எவ்வாறெப்திற்றெனவும் பொருள்படும். இச்செய்யுள் சிலேடை.

க௪. விழியிணை - சூரிய சந்திர நேத்திரங்கள்.

கரு. கிள்ளையென்பது பிள்ளையென்பதற்கியைய இணைந்துவருமொழியாய்க் கிளியையுமுணர்த்திற்று.

க௬. கணவரளித்தது கொண்டு அறம் வளர்ப்பார்க்கே கற்புமாட்சியுரித்தென்பது நூற்றுணிபாகலின் மனைமாட்சியெய்து முனக்கே பெருங்கற்பு மாட்சியெனவும், அஃதியற்றார்க்கு எங்ஙனமெய்து மென்பார் பினைமாட்சியார்க்குண்டெனவுங் கூறினர்.

கஎ. முன் பதிமேலெதிர்ந்தவெனவும், உனது நடு செங்கரும்போ இதுபிடியு ளடங்கியதென் சொல் எனவுங் கூட்டுக. சிலைபோதல் - சிலையிற்றேர்தல். நடு - இடை.

கஅ. தோளி - வினைக்குறிப்புப்பெயர். அழுமாறு நங்கணவர்தலையும் இவ்வாறுங்கொலென்னும் ஏக்கத்தாலென்க.

பெரியநாயகியம்மை கலித்துறைக் குறிப்புரை முற்றிற்று.

---

# நன்னெறிக் குறிப்புரை.

க. பூங்கை துன்றுசுவையை நாவிற்கு நயந்துதவும்; அது தன்னைப் புகழவோ புகழ்தற்கன்று என்பது.

உ. பிறிது - ஈண்டுக் கொடிதென்னும் பொருட்டு. நல்லோன் - சாக்கிய நாயனார். கருப்பு - கரும்பு; மகரம் பகரமானது வலித்தல் விகாரம்.

ங. உரியவர் - நட்புடையவர், உறவினருமாம். ஒன்றை ஒருவரிடமிருந்து பெறவேண்டுமானால், அவர்க்கு உரியவர் மூலமாகப் பெறவேண்டும்.

௪. பேறு - செல்வம். பெய்யா - பெய்து.

ரு. திண்மை - வலிவு. நொய்து - சிறுமை, இங்கு அற்பமாம்.

சு. எண்ணிரண்டுகலையும் எனக் கூட்டுக. கணவனும் மனைவியும் ஒரு வேலையை ஒத்துச் செய்யவேண்டும்.

எ. முனிக்கரசு-ஈண்டு அகத்தியர்; இவரைச் சிவபெருமான் தம்மை ஒத்தவராக விதந்த சிறப்புடைமையினென்க.

அ. கவர்ந்து-வயப்படுத்திக்கொண்டு. ஓங்கு - மேன்மேல் உயருகின்ற; இங்குப் பெருகுகின்ற.

கூ. விரவலரை ஐ அச்சப்பொருளின் வந்த இரண்டனுருபு. கட்செவி-பாம்பு, இது கண்களையே செவிகளாகக் கொண்டது; அதனால் இப்பெயர் பெற்றது.

க0. கறை - மாசு; களங்கம். நல்லோர் நிலாவைப்போலத்தங்கட்குஎவ்வளவு துன்பமிருந்தாலும் அதனைக் கருதாது பிறர் துன்பத்தை நீக்குவர்.

கக. புலன்கள் ஐந்தாவன: மெய், வாய், கண், மூக்குச், செவி என்பன. இவைகளால் அறியப்படுவன, ஊறு, சுவை, உருவம், நாற்றம், ஓசை ஆவனவாம். அற்பர்கள் புலன்கள் வழிப்பட்டுத் துன்பப்படுவர், உண்மையறிவு வாய்ந்தவர்கள் அவைகளால் துன்பப்படார்.

கஉ. ஒன்பான் வாயில் - ஒன்பது துவாரம்; புதுமை - அற்புதம், இங்கு வியக்கத்தகுவது. சீதம் - குளிர்ச்சி.

கங. சுருக்கம் - குறைவு; கலை-நிலவொளி வளர்ந்தும் குறைந்தும் தோன்றும் நிலா. தன் கலைக்கேற்ப ஒளி தருவதுபோல் மேலான அறிவுடையவர்கள் தம்மிடத்துள்ள பொருளுக்கேற்றபடி பிறர்க்கு உதவுவர்.

க௪. தொலையா - அழியாத, செருக்கு- ஆணவ முனைப்பு. அதைக் கர்வம் என்பர். கோதை - இங்குப், பூமாலை; ஈர்ங்கோதை என்பது குளிர்ந்த பூமாலை.

கரு. மொழியிலார் - ஊமைகள்; முது - பழைய.

கசு. செல்வர் - இங்கே, போய்.

கஎ. ஈகை - கொடுத்தல்; தொடி, தொடுக்கப்படுவது தொடி. அஃதிங்கு வளையல். அஃது அன்மொழித்தொகையாய் வளையலையணிந்த பெண்ணை யுணர்த்தி நின்றது. அரம்பை-வாழை.

கஅ. இரு - இங்கே, பெரிய. உலகம்-இங்கே, உலகத்திலுள்ளவர்களை. கதிர் - நிலா.

ககூ. உறீஇ - அடைந்து; சொல்லிசையளபெடை.

உ0. இழுது-வெண்ணெய். மண்டு-நெருங்கிய.

உக. சுரநீர் - ஆகாயகங்கை.

உஉ. சேக்கை - மெத்தை.

உரு. நொய்து - இங்கே இலேசு.

ஙசு. முளி - உலர்ந்த;

ஙஎ. பிணர் - சேர்ந்த, நெருங்கிய.

ஙகூ. உற்று-அடைந்த, உழி-இடம்.

௪0. புனை - அணி, புனையா-அணியாத. பொன் அணியணிந்த பிற உறுப்புக்கள் கண்ணுக்கொப்பாகாததுபோல பொன்னணியணிந்த அரசர்கள் புலவர்கட்கொப்பாகார். மன்னும் - நிலைபெற்ற.

நன்னெறிக்குறிப்புரை முற்றிற்று.

# திருவெங்கைக்கோவைக் குறிப்புரை.

(காப்பு.) கோவை-கோவையென்னும் நூலையும், கோவைக்கொடியையும்; கொம்பர் - கொம்பையுடைய யானைமுகக் கடவுளையும், அர் இறுதி பெற்ற கொம்பையு முணர்த்தலின் சிலேடை.

க. முகமாகிய தாமரை முதலியன கொண்டு எதிர்ப்பட்டதென்க.

உ. பெண்ணே டிருக்கும்பொழுது கண்ணேடிருக்கும் முகம்போல்வதாகிய இடம், மண்ணுதியவற்றுள் எதுவோ அது கண்டிலம் என்பது. அவணிமங்கை வரையரமங்கை திருமங்கை தேவமங்கை நீரரமங்கையென்பவருள் எம்மங்கையோவென்பான் அவரவரிடஞ்சுட்டி ஐயுற்றவாறு. பிந்தியதும் இது.

ங. சிலை - வில். நறு-அழகிய. முலையும் கண்ணும் முகமுங் கூறுதலான், முறையே மலைமகளோ, கடல்மகளோ அன்றி மலர்மகளோவென ஐயப்பட்டவாறாயிற்று.

ச. நம்படியே சுமவாநின்று நண்ணியமை காட்டியது என்க. படி - இப் பூவுலகம்.

ரு. இது (க0கூக) ஆவது திருக்குறளின் கருத்தது. (இருநோக்).

சா. இது (க0ருக) ஆவது திருக்குறளின் கருத்தது. (இரக்க.)

எ. நிக்கிரகம்போல் அநுக்கிரகமும் புரிகவென்பது.

அ. வார் கள் என்பதை கள் வார் என மாற்றுக. கள் வார் - தேனெழுகுகின்ற. கண்ணுக்குப் பகையாவது மலர். அது கண்ணை யொத்திருத்தலால் "கண் பகைத்துநின்ற வாரக்கட் பூ" என்றார் என்க.

கூ. மை-கருமை. மதுகரம் - வண்டுகள். செய் — இங்கே, வகிர்ந்த.

க0. காகதாலியம் ஒரு நியாயம்; இது காக்கையேறப் பனம்பழம் விழுந்ததென்பது. இதனை அறிந்திலிரோ என்றபடி.

கக. பொருநை - தாமிரபரணிநதி.

கஉ. உதவுதற்கே பொன்மலையை வளைத்தது ; அல்லாமல் மலையை வில்லாக்குதல் யாண்டையதென்பது.

கங. காந்தருவ மணம் புரிதற்கு இடம் உற்று அமைந்தது என்பது. கணி-வேங்கைமரம்.

கச. மிகல்-மிகை. புரந்தவன்-சிபிச் சக்கரவர்த்தி. அயல் படர்ந்தேறல் - தனங்களிலணியப்பட்டுப் பரவி நிலவல்.

கரு. உன்றனைப்போலப் புதைப்பது கதையாலும் அறிந்திலம் என்க. இத் துறை நாணிக் கண்புதைத்தலெனவும் படும்.

கசா. இம் மலையரண் கிடைக்கின் மதனைவெல்லலாம் என்பது.

கஎ. சம் தாபம் - பிறவிவெப்பம்.

கஅ. புல் - புல்லுணவு. அருந்தவம் குறைவின்றித் தோன்றும் என்பது. முகாம்புயத்துக்கு என உருபு விரிக்க.

ககூ. தனி - தனக்கு ஒப்பில்லாத, பனி - குளிர்ச்சி, பரிவு-இரக்கம். வாள் - ஒளி. மதி - இங்கே சந்திரன். இவள் புன்முறுவல் காமக்கடலைக் கடப்பதற்குப் புணையாயிற்றும். அம் முறுவல் பரிவொடு தோன்றுதலின் அவ்வாறாயிற்றென்க.

உ0. குவடு - உச்சி, அங்கை என்பதை அகம் கை எனப்பிரிக்க. அங்கை என்பது உள்ளங்கை. வாரி - கடல்.

உக. ஐந்திந்திரியங்களும் இன்பமெல்லாந் துய்த்தன என்க.

உஉ. தாழ்-தொங்குகின்ற. சந்திரன் கலைகுறைந்தாலும் அன்றி வளர்ந்தாலும் இவள் முகத்துக் கொவ்வாது என்பதாம். இதனால் இவளது நலம் பாராட்டலாயிற்று.

உங. வரை - இங்கே மலை. இது மூங்கில் வளரப்பெறுதலால் இப்பெயர் பெற்றது.

உச. நிலவு - ஈண்டு முறுவலொளி. ஆவி - தடாகம்.

உரு. சதாகதி - காற்று.

உசு. கைம் மா-கையிலுள்ள மான்.

உஎ. விம்மி - பருத்து. குறுகுவன்-வருவேன்.

உஅ. பழனம்-வயல். அது சார்ந்த இடமுங் கொள்க.

உகூ. மொழிமாற்றுப் பொருள்கோள் - எண்வகைப் பொருள்கோளில் ஒன்று; அது அவ்வவ்விடங்கட்கியைய மொழிகளை மாற்றிப் பொருள் கொள்வது. வழி - முறைமை.

௩0. புடை - பக்கம். வெற்பு - மிக உயர்ந்த மலை.

௩க. இடைமிடித்தார் அன்னம்பிடி என்பன சிலேடை.

௩உ. பாயவெள்ளம் - பயவெள்ளம்; ஈண்டுப் பாற்கடல்.

௩௩. சேவை-இடபத்தை. சிலம்பு-மலை. இது எதிரொலித்தலால் இப்பெயர்பெற்றது. பூவை-நாகணவாய்ப்புள். உருத்த-வென்ற. முகாம்புயம்-முகம் அம்புயம்; முகமாகிய தாமரை. பொறி- அறிவு.

௩ச. தாமரையும் மதியும் ஒளியிழத் தலைக் கண்டவர் உவமியார்: காணுதவரே முகத்துக்கு உவமிப்பரென்பது.

௩ரு. உற வாழிய என்க.

௩சு. புயல் கரவு-மேகமாகிய முதலை.

௩எ. ஒருவன் என்றது ஏலேலசிங்கனை.

௩அ. அங்கம் - எலும்பு. வங்கம் - மரக்கலங்கள்; கப்பல். தரளம் - முத்து.

௩கூ. அவசம் - பரவசம்.

சக. போலவும் போலவும் உனை நோக்கிநிற்கும் என்க.

சஉ. போல் வெல்ல வலியில்லை என்க. வன்னி - கிளி.

சச. மலை பணி அரி வில் நாண் கணை என்பனவும், சிலை குணம் கணை வேழம் சுரும்பு அலர் என்பனவும் நிரனிறை. வந்த ணண்பா என்னும் பாடத்திற்கு மொய்குழல் வந்தன் என்க; வந்தனள் எனற்பாலது ஈண்டு அன் சாரியை தொக்கு நின்றதென்க.

சரு. பொதிந்து - சூடி. மேதை-அறிவுகொடுத்தற்குரிய.

சசு. நஞ்சுவந்தோன் - சிவபெருமான். உவத்தல் - இங்கு விரும்பியுண்ணுதல்.

சஎ. பெண்டு - பெண்.

சகூ. முகை - ஈண்டுத் தனம்.

ருக. அகம் - மனம், வீடு. திட்டி - கண், நுழைவாயில். வேழம் - யானை போலுந் தனம், யானை.

ருசு. தனத்தார் இடை இறையவன் என்பன சிலேடை.

ருங. சங்கம்-சங்கு, கூட்டம். அன்னம்- அன்னப்புள், உணவு. தாள் - தண்டு, கால்.

ருச. சங்கேதம் - நியமம்.

ருரு. தார் - பூவரும்பு.

ருசு. கொற்றி-துர்க்கை, உடைந்த-தோற்ற.

எ0. புணர்ச்சியினெய்திய வேற்றுமை சுட்டித் தலைவியைத் தெய்வமகளாகக் கூறியவாறு, எண் ஊடு-எண்ணுதலில்.

எங. கலைபோல் நொந்தேனென இயையும்.

எச. குளிர உரையீர் என்க.

எஎ. என்னேயென்பது இன்ன தென்பதுபட நிற்குமொழி.

அ0. கான் ஐ கலை - காட்டிலுள்ள அழகிய ஆண்மான்.

அஉ. எனதம்பு பாயக் கலைதுள்ளி வந்ததெனத் தலைமகன் சாற்றியும் இவர் மாந்தழையால் எய்தாரெனப் பாங்கி பகர்ந்தது கையில் அம்பின்றித் தழைகொண்டு சார்ந்தமையினென்க.

அரு. எல்லாம் கண்களே தெரிவிக்கும் என்பது.

அ௬. பொய் - பொய்ப்பொருள்கள். புனநடுவின் வம்மேவுறும் அது - புவனம். கும்மேல் வரும் வளை - குவளை.

அஅ. பொய் - பொய்ப்பொருள்.

கூ0. ஊழ் ஒளி-வெயிலைவிரிக்குஞ் சூரியன்.

கூக. வீ—வண்டுகள். தொடை-இங்கே பூமாலை.

கூ௩. வெங்கைவாணர்க்கு மழு இலையேல் கவர்வம்; அகப்படின் அதிலுள்ள மான்பொருட்டு மதி கீள்வேம் என்க.

கூ௪. கொங்கையே அறியாமையநிந்ததென்றது இடைவருத்தம் நோக்காமையின் என்க.

கூரு. உலகவழக்குரை பொய்சொன்னவாய்க்குப் போசனமுங் கிட்டாதென்பது.

கூஎ. கண்டாதியன சிலேடை.

கூக. அத்தி என்பது ஒருவகைமரம். மால் - ஆசை.

க0உ. தாள்முறித்தல் - (கனத்தால் இடைவருந்தாவாறு) காம்பு களைதல்.

க0௬. பாவாக்கி - பாவையுருளும் வாக்கினர்; (ஆளுடைய பிள்ளையார்.) ஆண்பனை பெண்பனையாக என்க.

க0எ. மணிமேகலைநூல் - மணிகள் கோத்த மேகலையணிந்த நூல்போலும் இடை; மணிமேகலையென்னும் நூல். சிந்தாமணி-குன்றாத கண்மணி; சிந்தாமணியென்னும் நூல். திருக்கோவை-அழகியகண்ணை; திருக்கோவை யென்னும் நூல். கோ - கண். உரை - வார்த்தை; மேற்படி சிந்தாமணி திருக்கோவைகளின் உரை என்றிங்ஙனங் கொள்க.

கக0. கருங்கட்குடம் - கரிய சூசுகத்தையுடைய குடம் போலுந் தனம்; கரிய கள்ளையுடைய குடம் என்க. தாலம் - பனைமடன்மா; ஆகுபெயர்.

ககக. பொடித்தல் - அரும்புதல்.

கக௬. கற்று - கன்று ஆ. வலித்தல் விகாரம் பெற்றுக் கற்று என நின்றது.

ககஅ. நில பிறை - நிலவைப் பரப்பும் பிறை. தழை இட்டால் வளர்ந்தெழும் என்க.

கஉக. திருமகளுக்கு உறைவிடமாகி யாண்டும் பரவும் வல்லகோலாதிபதியத்திற்குத் தகுதிபூண்ட அண்ணாமலை ரெட்டியாரென்னும் அரசரமைத்த ஆலய மூலஸ்தானத்திற்குப் பழமலைநாதரெழுந்தருளினர் என்னும் இது, தலைவி நாணால் நேரே உடன் பாடுகூறாது குறிப்பாற் கூறியவாறும். இதனுள்ளுறை:—அவரன்பு காரணமாகப் பழமலைநாத ரெழுந்தருளியாங்குத் தலைவரும் எனதன்புகாரணமாக அகப்பகுதிநாடிப் போந்தனரென்பது; அகப்பகுதி - அகத்தேநிகழும் காம இன்பத்திறம். வல்லகோலாதிபதியென்பது, அண்ணாமலை ரெட்டியார் பரைம்பரைக்குரிய பட்டப்பெயர். இவராலயம் வகுத்தது வெங்கையுலாவிற் காண்க.

கஉஉ. மாற்றி-போக்குதலையுடைய பெருமான்.

கஉ௪. சூல் இலை - கருப்பமில்லை.

கஉ௬. வரையினவர் ஆணெரன இயையும்.

கஉஎ. நந்தா-கெடாத. சந்தாடவி-சந்தம் அடவி; சந்தனக்காடு.

௧௨௮. சேரனை மதிமானென்றது மடலேறுதற்குரிய பனைமாலையைத் தனக்குரித்தாகக் கொண்டமையின் என்க.

௧௩௧. பலர்செய்த-பலர்செய்தனவும்.

௧௩௨. உயிர்த்து-இங்கே மோந்து. தலைமகன் வந்துழிச் செய்யுமுபசாரமத்துணையும் வன் றமைக்குச் செய்தாள் தலைவி என்பது அரைத்துக் குடித்திலள் அன்ப செய்யாதது மவ்வளவே' என்பதனாலறிக.

௧௩௪. கொடியாகிய பெண் கொம்பராகிய கணவனோடு ஆடிய எனவும், கொடிபோலும் பெண்ணே கொம்பர் போலுங் கணவனோடு நீ கூடுதலைச் செய்ய எனவும் கொள்க.

௧௩௫. மருவலர் - மணமலர், பகைவர். அளியினம் - வண்டினம், அன்புடைச் சுற்றம். ஆர்ப்ப-முழங்க, கூவ. முருகக்கடவுள் களிப்புறும் மயிலாடலை நோக்கி நிற்கவெனவும், முருகக் கடவுள்போலுந் தலைவர் காதலிக்கும் மயில்போல்பவளே நீ அத் தலைவரோடு கூடுதலைச்செய்து நிற்க வெனவும் கொள்க.

௧௩௭. சிற்றம்பலமென்பது அதனின் மிக்கதொரு பேரம்பலமுண்டென்பது குறியாது ஞான அம்பலமெனக் கொள்ளக் கிடப்பதுபோன்று சிற்றின்பமென்பதும் அதனின் மிக்கதொரு பேரின்பம் உண்டென்பது குறியாது ஞானவின்பமெனக் கொள்ளக் கிடந்ததென்பது. சிதாகாசந் தன்னைப் புனைந்து சொல்வரென இயையும். சித் - சிற்றெனத் திரிந்தது.

௧௪௦. அன்னம் வண்டு ஆகியவிவற்றின் உறவு முற்றும் விடுத்து மதியை நோக்கி இதழ்களைக் குவித்து எனக் கஞ்சத்திற்கும், அம்சமந்திரம் உச்சரித்தலமைய வாயு முற்றுமடக்கி அமுதப்பெருக்கொடு கூடிய சந்திரனை அகத்தே நோக்கிக்கொண்டு கண்ணிமைகளை மூடியென யோகிகட்கும் கொள்க.

௧௪௩. மணி - இங்கே அழகிய. குறும்பூழ் - காடை. மூரல்-சோறு.

௧௪௭. கருமுன் - கருவில்; முன் - எழனுருபு. ஆயவெள்ளம் அணை கோல என்பன சிலேடை.

௧௫௦. அந்தகனை அழைக்கும் வன்பு நஞ்சு என்க. முன் பந்தனை இலர் - அநாதிமலமுத்தர்.

௧௫௩. மணிக்குரல் இப்பொழுது கேள்; கேட்கின் சிலை கரும்பாம், பகழி மலராம் என்பது.

௧௫௪. தழல் - கவண்.

௧௫௬. பூமடவார்-கலைமகளும் திருமகளும்; இவ்விருவரையும் விழியாகக் கொண்டமைபற்றியே காமாக்ஷியென வழங்குவர். கா - கலைமகள்; மா - திருமகள்; அக்ஷி - அக்ஷமாகவுடையவள்.

௧௫௭. அச் சுரும்புபோற் சூழ்ந்து காக்கவேண்டும் என்பது.

௧௬௦. மாளுதல் கலைகுறைதல்.

௧௬௨. வைரோசனன்-வாணசுரன்.

௧௬௩. இருந்தது அறிவிக்கவோ என்பது.

௧௬௫. குறிப்பது போலும் என்க.

௧௬௬. வெய்யவன் - சூரியன்.

௧௬௮. பங்கம் - அழிவு. மாதங்கம்-யானை. சங்கம் - கூட்டம்.

௧௭௧. இறை - கை; ஆகுபெயர். மதன் மலர்க்கணை அஞ்சுமெய்யக் களபக்கோலமணிவர் என்பது.

௧௭௨. வில்லின் மாட்சிமையை மதித்தலுடைய கைத்தாமரை (இரவுக் குறிவேண்டி) அஞ்சலியா நிற்கக் காண்பான் விரும்பும் என்க.

௧௭௩. காற்றால் அசையும் அச் சருகு எழினும் இத்திறம் ஆபத்துவிளையும் வனத்துவர எங்ஙனம் திடங்கொள்வதென்பது.

கஎச. தலைவர் இருளில் வருகைக் குத் துணியாததுபோன்று நடித்து என்மனம் நின்மனம்போன்று துணிந் ததென்பது.

கஎரு. குறிப்பிசையைக் கரைத்து வந்தேன் என்க.

கஎசு. தலைமகனுக்கும் யானைக்கும் சிலேடை. வேல் - ஆயுதம், மூங்கில்.

கஎஅ. முருந்தா என்பது மயிலிறகி னடி. அளி - வண்டுகள். 'இருந்தா மரைக்கள் மறுத்த இப்போது' என்ப தால் இரவுக்காலம் என்பது அறிக. இரவில் தாமரைக்கண் வண்டினங்க ளடையா. அது குவிந்திருத்தலின் மல் லிகை மலர்கள் இரவில் மலர்வன. மலர்ந்தால் வண்டுகள் அதில் அமரும். அதுபோல் இரவிற் றலைமகன் வந் தணுகுக என்பதாயிற்று.

கஅ0. பூ அகமென்றது இலக்குமி என்பது குறித்து. இதனை ககசு-வது செய்யுளிலும் காண்க.

கஅக. மாறன் - இளையான்குடிமாற நாயனார்.

கஅஎ. மட்டு - தேன், அளவு.

ககக. கம்பு - சங்கு.

ககஉ. செப்பு - சிமிழ். ஒது - உவம வுருபு.

ககசு. மறைவனத்திற் கதவுதிறந் தடைத்தவர்-ஆளுடையவரசும் ஆளு டைய பிள்ளையாரும். இருவர்-சூரிய சந்திரர்.

ககஎ. இரவில் தலைவிக்குக் கொணர்ந்த பூமாலையைத் தான் வந் தமைக்கு அறிகுறியாக மாதவியில்விட் டகன்றமை குறித்தவாறு. மணம் - வாசனை; விவாகம்.

ககக. வேங்கைமரத்தினும் முல்லை மாலை சூட்டியகன்றனன் என்பது.

உ0ச. துஞ்சுதல் — துயிலுதல். நஞ் சாம் என்பதில் ஆம் உவமப்பொருட்டு.

உ0அ. மேவாதவண்ணம் கொட்டு பறையென இயையும். நெய்தற்பறை - சாப்பறை.

உக0. கொடி - காக்கை.

உகக. இது உகசு - வது திருக் குறளின் கருத்தது; (வாய்மை).

உகரு. வேலை - இங்கே கடல். கதிர் - சூரியன்.

உஉ0. பகர்ந்து இடனுகுதும் என இயையும்.

உஉக. பொறி ஆலயம்-இலக்குமிக் குரிய செந்தாமரை.

உஉச. மலய அநிலம் - தென்றல். காம அனலம் - காமாக்கினி.

உஉரு. வம்பு-வாசனை, தீச்சொல். மதி-சந்திரன், புத்தி. வண்டு-சுரும்பு, வளையல். அம்பு - நீர், பாணம். கண் முத்து - கள்ளாகிய முத்து, கண்ணீ ராகிய முத்து. வெம்பு - விருப்பு.

உஉஅ. தரும் காமநோயைக் குறித் திலளாய் என்றும் பாடம்; இதில் ஆய்-தாய், அணங்கிற்று - வருத்திற்று. வெறி - ஆடு; இது கொண்டது அத் தெய்வத்திற்குப் பலியீதற்கென்க. விதி - சிலேடை.

உஉக கருங்கண்ணி - அண்மை விளி.

உருச. தலைமேற்படுபொறி என்றும் பாடம். வெறியாடல் - வேலனாடல்.

உருரு. சுகரும் வாமதேவரும் துற வின் முதிர்ந்த இருமுனிவரர்.

உருஎ. வேங்கைபூத்தலும் சந்தி ரன் பரிவேடங்கொள்ளுதலும் வாய்ந்த காலமே மணம்புரி காலமாகக் கோடல் வேடகுல மரபு. கணி - கணிப்பவ னெனவும் பொருள் பயத்தலின் மண நாளுரைப்பவென்றும், மலர் பொன் போற் குவிதலின் கடன்றரவென்றும், அக்காலை தடை செய்த லியல்பாக லின் ஊர்கோளைத் தலைமகள் புறம் புறம்போகாவாறு அன்னையிட்ட கிற்

றென்றும் உருவகித்தவாறு. ஊர் - பரி வேடம்.

உ௬அ. நின் பழி - நினக்கு நேர்ந்த பழி. கரத்தல் - தலைமகள்பிரிவால் உளவாகும் பீர்பூத்தல் வளைகழலலாதி யன புலப்படாவாறு மறைத்தல்.

உ௬௯. ஒளிவால் இருந்தார் என்றும் பாடம். குறி - குறியிடம்.

உ௭0. நந்துதுயில் கொள் என்க.

உ௭௧. கோல் - சூரியன்.

உ௭௩. வண்டெனநெருங்கும் என்க. கடி - பேய்.

உ௭௫. பவம் - பிறவி. கொடுவரி - புலிகள். செறி - நெருங்கி. துன்பத் துக்கிடமான வழிகளைச் சிறுநெறி என்பர்.

உ௯0. குரு - ஒளி. வரையன்ன - மூங்கிலை யொத்த.

உ௯௭. நாளைவராமல் மறிப்பீராக வென்றது இன்றேயான் இறந்துபடு வன் வருவதெற்றிற்கு என்பது தோன் றுதற்கென்க.

உ௯அ. களபமென்னப் பூசுக என் பது.

உ௯௨. ஆகி வேறு தவறு விளைதல் இலதாக நின்னுயிர்போல்வாளைப் புரந் தேன் என்க. இலதாய்-எச்சத்திரிபு.

உ௯௪. இது ௧௧௯௧-வது திருக்குற ளின் கருத்தது; (செல்லாமை). முன் பின்-அறமும் இன்பமும்.

உ௯௫. ஆணிக் கனகம் - மேலான பொன். அது செம்பொன் என்க. உரைத்து மாற்றுப்பார்த்தலுக் கிளைக் காத பொன் என்ப. பாணிக்கும் - காலம் நீட்டிக்கும்.

உ௯அ. பிரியாத தலைவர் பிரியப்பட் டவள் நீயொருத்திதானோ என்பது.

உஎ0. மான்பிணைகாண்டலும் மீள் வரென்க.

உஎ௧. பூட்டாத வில் - மேகவில். தீட்டாதவம்பு - நீர்.

உஎஉ. வம்பு - காலமல்லாதகாலத் திற்றோன்றுவது. குயில் எமருபருவம்; கார்காலம். எமரல் - கலங்கல்.

உஎ௩. பசப்பு - காமத்தால் வேறு படுநிறம். குருகு - வளையல். தோன்றி- செங்காந்தள்.

உஎ௫. ௧உ௬௩-வது திருக்குறட் கருத்தது; (உரனசைஇ).

உஎஎ. தேர்செலுத்துக என்க.

உஎஅ. அன்று - அன்றி.

உஎ௯. ஆகியவென்பது ஆகிய கல் எனப் பெயரெச்சமாகியும், ஆகிய ஆர்க் குமென வினையெச்சமாகியும் பொருள் பயந்து நின்றது. கல் - முறையே கல் லும் ஒலிக்குறிப்புமாம்.

உஅ0. சுரம் ஆர்க்கும் வலம்புரி வாழ்க என்க.

உஅஉ. துறந்தார் மனம் மறத்தலும் நினைத்தலுமின்றிப் பரமசிந்தனைமய மாய் நிற்பதுபோன்று என் மன நிற்ப தென்க.

உஅ௩. விண்மணி - சூரியன்.

உஅ௪. மலைவு - மயங்குதல். இல்லை என்பது தொகுத்தல் விகாரம் பெற்று இலை என்று நின்றது. விலை - வில்லை. வில்லின்றொழில் கொலை செய்வது. அதனாற் கொலை வில் எனப் பட்டது. முகிழ்-தாமரையரும்பு.

உஅ௬. இந்தீவரம் - கருங்குவளை.

உஅஎ. துயரம் செல்லுமென இயை யும்.

உஅஅ. கணம் - விண்மீன்.

உ௯0. மால் - மேகம்.

உ௯௩. கூறுமெனில் தெளித்ததற் குக் குருகும் கரி உண்டு; எனவே அக் காலை பிறிதொன்றுமில்லை என்றபடி. இலைசூழ் மனை - பர்ணசாலை.

௩0எ. உறை - நீர்.

௩0அ. கலந்தாங்கு மணஞ்செய்யும் என்க.

௩௧0. ௧௧உ0-வது திருக்குறளின் கருத்தது. (அனிச்சமும்).

௩௧உ. பாலை நெய்தலாகப் பாடியது திருநனிபள்ளியில்.

௬கரு. பெண்ணணங்கு - தார்க்கா தேவி; எனவே, காவியாதியபோ லும் அத்தேவி யுறுப்பன்றி வேறுகாவி யாதியவும் அவை பூத்த வாவியாதிய வும் சுரத்தின்கண் இன்றென்பது.

௬கஙி. நாண்முதலியன மற்றைப் பூண்போலும்; கற்பு மங்கல நாண் போலும் என்க.

௬கஅ. சிவன் உமையையும் வசிட்டன் அருந்ததியையும் துறந்தாலும் என்க.

௬உக. நிழல்போல நேர்ந்தது என்க.

௬உடு. தாதை - தந்தை. இறைவனைத் தாதையென்றது வேண்டாமல் வேண்டுவன அவன்றானே தருதலால்.

௬உகூ. கணி - கண்ணி. வேழம் பர்-கழைக்கூத்தர்.

௬உஎ. இர்நகர் முன் பொன்னகர் பயனற்ற நகர் என்றது.

௬௩௩. மாலை - இங்கே பூமாலை. பாலின் இன்சுவைபோல் சொல்லிற் சுவையுடைமையின் 'பாலைப் பொருமொழி' என்றார். முத்தும், மணியும், மலரும் தாம் தோன்றியவிடத்துக்குப் பயன்படாது பிறர்க்குப் பயன்படுவது போல பெண்களும் தமக்குரியவரை மணந்துசெல்வர்; பிறந்தவிடத்துக் குதவார்.

௬௩௬. விநாயகக்கடவுள் காக்கை வடிவிற்சென்று காவிரி நதியைக் கவிழ்த்த சரிதம் கந்தபுராணத்துணர்க.

௬௩அ. பூவிதழ்களைப் பரப்பி அதில் வைப்பினும் குழையும்பதம் என்க. பூவின்முகம் - பூவிதழ்.

௬௩௯. மகளிர் புறம்போந்துலாவுதற் கியலும் பேதைப்பருவமும் அஃதிய லாத மங்கைப்பருவமும் போலாது, பெதும்பைப்பருவம் இவ்வீரியல்பும் ஒருவாறியைந்துளதாகலின் இதற்கு இத்தகைய பகலிரவுகட்கு இடையதாகிய கருகுமாலை உவமமாயிற்று. பெதும் பைப்பருவம் தொடங்கியே புறஞ் செலாதவள் மங்கைப்பருவம் வந் துழிச் சென்றது வியப்பென்றபடி.

௬௪0. பன்றியெழுங்கால் கொழுநனுக்கு அபயமென்று.

௬௪க. வண்டல் - சண்டு மகளிர் விளையாட்டுக் கலங்கள்.

௬௪௩. விரை - மணம். மா-வண்டுகள். ஏ- வில்.

௬௪௬. அல்குலாளொடு என்றுயிலை என்க.

௬௭௭. தலைவனடி பேரடியும் தலைமகளடி சிற்றடியுமாயிருத்தலின் வெள்ளைக்குரிய அளவடியும் வஞ்சிக்குரிய சிந்தடி அல்லது குறளடியும் போல்வ வெனவும். அவை தனித்தனி செல்லாது அச்சமாதிய காரணங்களால் விரவலின் இவ்விடம் அவ்வீரடிகளும் விரவும் கலிப்பாவொப்பெனவும் கூறிய வாறும். தலைவனடியை வெள்ளையடி யென்றது வலம்புரிச்சங்க ரேகையுடைமையினென்க. வெள்ளை-வெண்பா, சங்கு. வஞ்சி-வஞ்சிப்பா, பெண். கலி-கலிப்பா, கெடுதி; வஞ்சகமுமாம்.

௬௫உ. இதில் வீ பறவை.

௬௫௩. ஆற்றுப்படுத்தல்-ஆற்றுவித்தல்.

௬௫எ. எனக்கோ அனைக்கோ எவர்க்கோ என்பது.

௬௫அ. ஆளரி — சிங்கம். ஈன்றவள் பெற்றவள். அறங்கோடி என்றது பல வறங்களை.

௬௫௯. இதழி-கொன்றை. தொடை-மாலை. பிறழாது - தவறாமல்.

௬௬0. எழுநா வான்றுசான்றாக - அக்கினி ஒரு சாட்சியாக.

௬௬௩. மார்பினுருடன் போயினள் என்றும் பாடம்.

௬௬௪. அணிவரையி - வில்லம் என்றும் பாடம்.

௩௬௭. இம்மலை கன் மலையெனினும் புயத்தோற்கு இடந்தருதலால் பொலிக என்றபடி.

௩௬௮. செம்பாதி - நேர்பாதி. சிவபெருமான் மணந்து சரீரம் பாதியாயினர்; இவர் பூரித்தனர் என்பது.

௩௬௯. வருத்தல் - ஈண்டு முயற்சியின்மேற்று.

௩௭௦. ௩௬௯.—தில் விழைவுக் குறிப்பு.

௩௭௧. மலரொன்றுபோல அலர்களை எங்ஙனம் சுமந்தனை என்பது; அலர் - சிலேடை.

௩௭௪. அன்று - அன்றி என்பதன் திரிபு.

௩௭௫. ௪௮-வது திருக்குறளின் கருத்தது; (ஆற்றின்).

௩௭௬. மேகங்கள் கீழ்நிலையினவாகலின் அருந்ததி நிலையிற் சேறலும் சொரிதலும் இன்மைபற்றி என்றும் பொய்யா என அவள் கற்புக்கு அவ்விசேடமின்மையை விளக்கியவாறு.

௩௮௩. வெள்வளை - வெண்மையான சங்கு. சலஞ்சலம் - வலம்புரி யாயிரஞ் சூழ்ந்த சங்கு. தாணு-பிரளய காலத்தும் அழியாதிருப்பவன்; அவன் சிவபெருமான் என்க.

௩௮௪. வெட்சி பூப்பறிவிக்கும் மங்கையர்க்கும் நிரைகவர்வார்க்கும் உரியவாகலின் இங்ஙனம் கூறியவாறு.

௩௮௬. ௩௧௪-வது திருக்குறளின் கருத்தது; (இன்னா).

௩௮௮. இன்பினை அமுதொப்பதன்று; சுவையே ஒப்பது.

௩௯௦. மணிபோலுயிர்த்து நெய்யாடினள் என்க.

௩௯௧. பத்திரதன்-தசரதன். புத்திரன் - தந்தைதாயரைப் புத்தென்னு நரகத்திருந்து எடுப்பவன்.

௩௯௫. பை - படம். செய் - வயல். பனி - குளிர்ந்த. தேரின் - ஆராயுமிடத்து. வெங்கரவன் - கொடிய திருடன்.

௩௯௭. ௨௫௬ - வது திருக்குறளின் கருத்தது. (ஒறுத்தார்க்).

௪௦௧. பரவை - பரவைநாச்சியார்.

௪௦௮. ௩௯௩ - வது திருக்குறள். (கண்ணுடையர்).

௪௧௦. செங்கமலன் - பிரமன். தலையோடு - கபாலம். இசைத்தல் - பாடுதல்.

௪௧௭. ௭௮௮ - வது திருக்குறள். (உடுக்கை).

௪௧௮. தீர்துயர் - பிறவியினையில் வந்த வினைத்தொகை.

௪௨௨. நாகு - இளமை.

௪௨௬. அனைய - ஒத்த. செயல் - தொழில். மருவி - பொருந்தி. மதி - மாதம். முக்கால் - மூன்று முறை.

திருவெங்கைக்கோவைக் குறிப்புரை முற்றிற்று.

---

## திருவெங்கைக்கலம்பகம்.

௩. கலை - லவணொற்றுமை.

௬. வில்லிறைவன் - இராமர்.

௧௦. சிவபெருமானுக்கு அம்பு திருமாலும் நாண் ஆதிசேடனுமாகலின் அம்புமேலிருக்கு நாரி என்றும், மன்மதனுக்கு அம்பு மலரும், நாண் வண்டுமாகலின் அம்பின்மேலிருக்கும் நாரியென்றும் முரண்பட விதந்தபடி.

௨௨. மை - ஆடு.

௨௫. விமலேசரெழிலோன் றிரதக்கா லென்றது, சிவபெருமான் கொண்டருளிய பூமியென்னும் இரதத்தின் உருளையாகிய சூரியனை; பின்

பின்னர் இரதக்காலென்றது, அச்சூரிய னுடைய இரதத்தினுருளையை; வாளி வாளி என்றது, அப்பெருமானுடைய பாணமாகிய திருமாலின் பாணத்தை. எனவே, என்றும் நியதியாகக் கிழக்கே தோன்றி மேற்கேயோடும் சூரிய னுடைய இரதவுருளை தெய்வகதியால் அந்நிலைமாறித் தெற்கே தோன்றி வடக் கேயோடினும், சுட்டிவிடப்பட்டா ரைத் தப்பாது கொன்றேமீளும் அத் திருமாலின் பாணம் தவறுதலை யடை யினும், அக்காலத்தும் என் மொழி பிறழாதெனத் தலைமக ளிசைத்தவாறு.

௩௯. சுடர்கால் - சூரியசந்திரர்க ளாகிய உருளைகள்.

௪௨. என்னடிகளென்றது திருவள் ளுவநாயனாரை.

௪௩. ஐய வென்பது அயவெனப் போலியாயிற்று.

௫௫. தமிழ்வந்து - தென்றல்; தமிழ்- இனிமை; தமிழ்ப்பாஷை.

௫௯. நாதித்தல் - ஒலித்தல்.

௭௫. பவம் - உலகம்.

௮௩. திருமறைக்காட்டுத் திருத் தாண்டகம் - க (தூண்டுசுடர்.)

௮௪. தீபம் - சுவாதிநாள்; ஐப்பசிமா தத்திலே சுவாதிநக்ஷத்திரத்திலே மழை பெய்யுமென்பதைச் சிந்தித்துள்ளவ ரென்னுங் கருத்தால் "தீபங்தோன்றும் யுயனினைவைத் தீரார்" என்றான். இச் செய்யுளில் சிலசொற்கள் சிலேடைப் பொருள் தந்து நிற்கின்றன.

௮௫. மாணிக்கமலை - இரத்தினகிரி; வாட்போக்கி என்பதும் இதுவே. இதில் பாலைக்கவிழ்த்த காகத்தை ஒரு இடையன் பொருட்டு எரித்த சரித்திர விரிவை அத்தலபுராணத்துட் காண்க.

௮௯. அறிதல் - ஈண்டு மதித்தல்; "பெறுமவற்றுள் யாமறிவதில்லை" என் னும் திருக்குறளிற்போல.

௯௩. மகளிர்கூந்தலை மன்மதனுக்கு அரணாகவகுப்பது நூற்றுணிபாகலின் குழற்காடு குறைத்தகருத்து மதனைப் பிடிக்கவோ என்றார்; இதனை "மட்டுக் கணைவேள் அரணாகவளர்த்த குழற் காடு" என்னும் பிரபுலிங்கலீலையானு முணர்க.

௯௫. இந்தீவரம் - கருங்குவளை. அதி ரேகம் - அதிசயம், உயர்ச்சி.

---

**திருவெங்கையுலா.**

கண்ணி - ௨௪. கோசலைநாட்டிலே மணிபிங்கலை நகரத்திலே அந்தண குலத்திலுதித்த விவசித்தென்பவர் வறுமைமேலீட்டால் எங்குமுழன்று வருங்கால், ஒருவனத்தில் ஒருதெய்வீ கச் சுனையில் மூழ்கி, அங்கே குபேர னது தங்கையாற் கிடைத்த ஆபர ணங்களைக் கைக்கொண்டு, ஒருகண நாதருணர்த்தியவாறே விருத்தகிரியை யடைந்து, அசரீரியின்படி உரோமச முனிவ ரநுக்கிரகம்பெற்று, அருந்தவம் புரிந்து பழமலைநாதர் கட்டளையின்படி அவ்வாபரணங்களை வைக்கப்பட்ட வன்னிவிருக்ஷம் வேண்டிய பொருளு பகரிக்க, அரிய திருப்பணி பலவும் புரிந்து சிவபதமடைந்தனர். இதன் விரிவை விருத்தாசல புராணத்துட் காண்க.

௯௭. அன்றுதல் - பகைத்தல்.

௧௩௧. ஐந்துமுதல் எழுவயதளவும் பேதை.

௧௪௦. எட்டுமுதற் பதினொருவயதள வும் பெதும்பை.

௨௦௪. மேம் - மேன்மை, செய்யு மென்னும் எச்சமுமாம்.

௨௧௭. ஓதி - அறிவு.

௨௨௭. பன்னிரண்டுமுதற் பதின் மூன்று வயதளவும் மங்கை.

௨௬௭. பதினன்குமுதற் பத்தொன் பதுவயதளவும் மடந்தை.

உ௭௮. உடைந்தாள் - தோற்றவள்.

உ௮௪. எய்யாமை - அறியாமை.

௩00. இருபதுமுதல் முப்பத்தைந்து வயதளவும் அரிவை.

௩௩௬. இருபத்தாறுமுதல் முப்பத்தொருவயதளவும் தெரிவை.

௩௬௧. நாவல் விலங்கல் - மேருமலே.

கண்ணி - ௩௭௧. முப்பத்திரண்டு முதல் நாற்பதுவயதளவும் பேரிளம் பெண்.

---

இட்டலிங்கவபிடேகமாலே.

௧. சிவலிங்கமே எவ்வகை மூர்த்திகளுக்கும் மூலமென்பது.

௨. ஆகமோற்பவவகைகளும், அவற்றில் விதிக்கப்படும் விதிமார்க்கம் பத்திமார்க்கம் இரண்டானும் முத்தியுண்டென்பதும் விளக்கியது.

௩. நின்மலபஞ்சாவத்தையியல்பும், சிவம் அவற்றிற்கும் அதீதப்பட்டதென்பதும் கூறியது.

௪. பெருமானுக்கு ஒன்றினும்விழைவில்லையாகவும் ஆன்மாக்களுய்வான் ஆகமங்களில் ஆராதனை விதித்தது.

௫. பெருமான் அனுக்கிரக நிக்கிரகவியல்பு.

௬. வீரசாமானியருக்குத் தூலதனுவிற்செய்யப்படும் இஷ்ட லிங்க எழுவகைத் தீக்ஷை.

௭. வீரவிசேடருக்குச் சூக்குமதனுவிற் செய்யப்படும் பிராணலிங்க எழுவகைத் தீக்ஷை.

௮. வீரநிராபாரருக்குக் காரணதனுவிற்செய்யப்படும் பாவலிங்க எழுவகைத் தீக்ஷை.

௯. அபிஷேகங் கொள்ளுமுறைமை.

௧0. சிவானந்தத்தினுயர்வும் சைவவருணெறிச்சிறப்பும்.

---

நெடுங்கழிநெடில்.

௧. எப்பிறவி நல்லனவென வினைதற்கணின்ற ஓகாரமிரண்டனுள் முன்னையது அர்ச்சனைபுரிந்த சிலம்பியாதியவற்றினுயர்பும், பின்னையது அதுபுரியாத மூடரினிழிபும் தோன்றநின்றன. தெறித்தவர் தமையும் வைத்தருள்வோயென இயையும்.

௨. அமைந்து கடந்திடாது இயன்றயாக்கையெனக் கூட்டுக. இத்திறயாக்கை யாதிய வுடையராய்த் தோழமை பூண்ட நம்பியாரூரர் முதலியோர் விரும்பியவாறுசெய்யத் தேவரீரேவலிந்துசெல்லுங் காலத்தும் அவர் அவ்வரியயாக்கையையும் வெறுத்துத் தேவரீரையே நண்ண; யான் இவ்விழிவுடல் நீக்கத்திற்கு அழிவேன் இங்ஙனமாயின் எங்ஙனமுய்வேன் என்பது.

௩. ஐம்புலன் - ஈண்டு ஐம்பொறிகள்.

௪. உலகையளந்த திருமாலாதியர் நறுமலர்சாத்தலாதிய ஒவ்வொரு தொண்டையே மேற்கொண்டொழுகாநிற்க, அவர் முன் நாணமின்றி அத்தொண்டனைத்தும் ஒருங்குடையதாகிய உமது பூசையைச் செய்கின்றேன் என்பது. இறைவரையழிப்பான் யாகமியற்றிப் புலியாதியவிடுத்தமைபற்றித் தாருகவனமுனிவரை விலங்கினுங்கடையரென்றார்.

௫. மூக்கிடைவிழிகளேறல்-காட்சிமழுங்கக் கண்சுருங்கல்.

௭. சிவசாதாக்கியமுதலிய ஐந்துசாதாக்கிய தத்துவங்களேயும் சதாசிவமூர்த்திமுதலிய ஐந்து தத்துவமூர்த்திகளேயும் முறையே உற்றன. ஈசானம் சத்தியோசாதம் வாமதேவம் அகோரம் தற்புருடமென்னும் முகங்களாகிய பிரபாவங்கள் எனக் கொள்க.

௧0. வெங்கையாதியர் சரித்திரங்களே வசவபுராணத்துட்காண்க.

---

குறுங்கழிநெடில்.

க. பொன்செய்வாணிகர் - பொன் வினைபுரியும் வாணிகர். (தட்டார்) பொன் ஈட்டும் வணிகருமாம். என் செய்கு - யாதுசெய்வேனென்னும் தன்மை யொருமை வினைமுற்று. ஓ வினுப்பொருட்டு.

உ. விட்டிடுமாறு - கடைக்குறைந்தது. ஆறு - தன்மை.

௩. தமவென - தம்முடையனவென.

௬. குருபணிக்கு உடலும், சங்கம பூசைக்குப் பொருளும், சிவத்தியானத்திற்கு மனமும், உரியனவாகப்புரிதல் வேண்டுமென்னும் நூற்றுணிபுபற்றி னைக்குறுகூறும் மனமென்றார். இதனை நிரஞ்சனமாலை ௧எ-வது செய்யுளானும் உணர்க.

எ. மலர்க்கருள்வதாயின் என் மலர் கல்லினுந்தீதோ என்பது.

அ. தருநீர் உனக்கு வாய்ப்புனலாமோ என இயையும்.

---

நிரஞ்சனமாலை.

உக. கருவன்று - கருவன்றி. கரு- வித்து. "விச்சதன்றியே விளைவுசெய்குவாய்" என்பதனாலும் அறிக. திருவாசகம், திருச்சதகம்.

சிவநாமமகிமை.

ச. இறந்திடாது என்பது ஈறுகுறைந்தது. (௫, ௬.) காணிய கூறிய என்பன செய்யிய வென்னும் வினையெச்சம்.

எ. வெண்மதிசூடி - வினைக்குறிப்புப் பெயர்.

---

நெஞ்சுவிடுதூது.

கண்ணி-௬. வாசனையென்றது தீவினைவிற்குக்காரணமாயுள்ள பாவனை வாசனையை என்க. தடுத்திருந்தது ஒன்று- அறிவைத் தடைசெய்திருந்த தொரு மலினம்.

௧௩. கழுவேறிகள்-சமணராதியோர்.

௧௪, ௧௫. என்பில் உயிராக்கினன் - ஆளுடைய பிள்ளையார்.

௧எ, ௧அ. எண்ணி இறப்பும் பிறப்பும் கடியப்பிறந்தான் என்க.

உக. கருணைபுரிதலாவது - தம்மை நோக்குதலாதியவற்றால் பாவிகட்குப் பாவ வொழிவும், தம்புனிதச்செயல்களை நோக்குதலால் உதாசனர்க்குப் புண்ணியவிருப்பமும், தம்மைவழிபடுதலால் பத்தர்க்கு நல்வினையும் தம்மை நம்புதலால் சீடர்க்கு முத்தியும் உண்டாக்கல்.

உஉ, உ௩. மூன்றுற்பெருக்கும் இரு சமயம்-அறுசமயம்.

உச. இது முதல் தசாங்கம் கூறப்படுகின்றன. இது கைலை மந்தரம் விந்தம் மேருவை இழித்தவாறு.

உ௫. வளத்து - வளத்தது.

௩உ. முப்பகுதியுயிர் - விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர். மும்மாயை - சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதி மாயை.

௩அ. வரையாமை - எழுதாமை, நீக்காமை. அநுமானித்தல் - காரியத்தைக் கொண்டு காரணத்தைத்துணிதல்.

௫௧. திருக்குறள் ௩௫.

௬௩. உன்னும்படி வேறிலாமையாவது இரண்டையும் சமமாகக்காண்டல்.

௬௫, ௬௬. ஐம்புலன்களையும் வெல்லுவது அருமையாகலான் "வெல்லாத ஐம்புலன்" என்றார். வெல்லாத ஐம்புலன்—பிறரால் வெல்லமுடியாத ஐம்புலன்கள்.

௬௬, ௬எ. இறைவன் மேனியே ஐந்தெழுத்தென்பது, "நம் பெருமான் மேனியா மஞ்செழுத்து" என்பதால் அறிக. ஐந்தெழுத்தே இறைவன் மேனி

யாம் என்பது மது; அஞ்சு ஆகுபெயராய் ஐந்திந்திரியங்களின் மேனின்றது.

அ௨. கவரி இரட்டி என இயையும்.

க௯, க௯அ. சாதமருள் - பிறவிக்குக் காரணமான விபரீதவுணர்வு.

க0௨ எம்மை யெமக்கருளாய் என்றது ஆத்மநிலையை விளக்குவாய் என்றபடி.

கக௪. இக்கண்ணி சிவக்கோலத்தைச் சுட்டிநின்றது.

கக௫. அடியேனும் க௨எ - காதலானேன் என இயையும்.

ககஎ. வில் நியாசம் - வில்லேத்தொடுதல்; பின் பகையின்மையின் நெற்றிக் கண்ணைத் திறந்தனரென்பது.

கக அ. கேவலம்-அறிவின்மறைப்பு.

க௨௪. இவர்கரம் பிரமகபாலத்தைக் கழுத்துப்போற் ருங்காமை குறிப்பித்தது.

க௫௪. தொகைபெறு-செய்யூ என்னும் வாய்பாட்டது.

க௫௬. கம்பர் - கலிக்கம்பர்.

க௬எ. நீ துணையல்லவென்று நின்று நீக்கினுல் என்க.

கஅ௪. சீர்மலிந்து கஅஎ - என்னும் என இயையும்.

நஅ௬. தன் என்றது மணிமுத்தாநதியை.

கஅஎ. செய்த்தாமம் - வயலிடம்.

கஅஅ. சுவை - உப்பு.

கஅ௯ க௯0. எருதற்கு எளியவழியாக உயர்த்த உப்புக்குவியல் என்க.

க௯௨. பூ-சிலேவை. சேடன்பணங் காட்டல் - பாதலங்காறும் பதிந்திருத்தல்.

க௯௯. வேளாளரும் கங்காபுத்திரராகலின் முருகக்கடவுளை சகோதரரென்ருர். கங்கை விடுப்ப என இயையும். ஆண்டு வேளாளரின் மிகுதிகுறித்தவாறு.

க௯எ. திருக்குறள், க௫௯௨.

௨00. சேயூர்-முருகக்கடவுள் தலம்.

௨0௫. இறைவன் நாற்பூதம் எனப் பிரிக்க.

௨0௬ அவன் என்றது நியாயனே. சேர நண்ணுரேல் என இயையும்.

௨௨௬. தந்திருபச்சை - யானையாற் கொணர்ந்த மரகதப்பச்சைக்கடகம். இச்சரிதம் சிவப்பிரகாசசுவாமிகள் வரலாற்ருல் உணர்க.

௨௪௨. ஒரு பூதருமில்லாதற்ற—ஒருயிரும் காட்சியிற்படா தொடுங்கியுள்ள.

சிவஞானபாலைய சுவாமிகள்
பிள்ளைத்தமிழ்
முத்தப்பருவம்.

க. பிலநதி - கம்பை.

---

அம்புலிப்பருவம்.

எ. நின்னிறநாமன் என்றது-சசிவன்னனை.

---

சிவஞானபாலையசுவாமிகள்
கலம்பகம்.

௪௬. இப்பிரபந்தம் ஆசிரியர்,அயிக்கமுற்றபின்னர் அருளிச்செய்ததாகலின் "நங்கண்களிப்ப நண்ணுமாயின் யாம் வினையறிகுதும்" என்று ஆற்ருமையால் விதந்துரைக்கப்பட்டது.

---

இட்டலிங்கவகவல்.

வரி-௯. பெரியோன்ருனும் திசைமுகத் தொருவனும் காண்டகில் செல்லாதென இயையும்.

௪௪. கடிஞை - பிக்ஷாபாத்திரம்.

அ௨. அஞர்மூன்று-ஆத்திரம் ஆதிபௌதிகம், ஆதிதைவிகம். அவை முறையே சடத்தொடுகூடியவுயிரினம் வாயிலாக வருவதும், பாசங்களின் வாயிலாக வருவதும், ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாக வருவதுமாகிய துன்பங்கள்.

௨௨. நோக்கிய ஒளி சிறந்தன்றே என இயையும். நோக்கிய - நோக்க. ஒளிசிறந்தன்று-ஞானம் மிகுந்தது.

௧00. ஒழிவின்றிருத்தலாவது - தூல தனுவில் இட்டலிங்கமாகவும், சூக்கும தனுவில் பிராணலிங்கமாகவும், காரண தனுவில் பாவலிங்கமாகவும் அகலாதமர்ந்திருத்தல். எங்ஙனமிருந்தனரெனின், காசி முதலிய பல்பெரும்பதிகளனைத்தினும் கண்டோர்க்கு வினைத்தொடர்பகல வீற்றிருந்தெனவே இருந்தனர் என இறுதியடிகளொடு கூட்டி முடிக்குக. இன்று - இன்றி.

௧௧௨. பெருங்காய் வீழ்தர வாளைபாயும் என இயையும்.

௧௫௨. களமர்வீழ வராலுகளும் என இயையும்.

# சிவப்பிரகாசசுவாமிகள்

## பிரபந்தத்திரட்டுக்குறிப்புரை

முற்றிற்று.

---

# ௧. சோணசைலமாலை

---

# ௨. நால்வர் நான்மணிமாலை

## ௩. திரோட்டகயமகவந்தாதி



## ௪. பழமலையந்தாதி

## ௫. பழமலை நாதர் பிச்சாடன நவமணிமாலை



## ௬. விருத்தகிரி பெரியநாயகியம்மை நெடுங்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

# எ. பெரிய நாயகியம்மை கலித்துறை



# அ. நன்னெறி



# கூ. திருவெங்கைக்கோவை

## ௰. திருவெங்கைக் கலம்பகம்

## ௧௧. இட்டலிங்க அபிடேகமாலை

| | | | |
|---|---|---|---|
| ஒருவனோர்பொரு | ௧௬௬ | நல்லதிலநெய் | ௧௬௮ |
| ஓகைமலிகுருவா | ௧௬௭ | நவிற்றலரு | ௧௬௯ |
| கருகிச்சிவந் | ௧௬௭ | நாடரியசத்தி | ௧௬௯ |
| கிடைத்தசிவ | ௧௬௭ | பந்தமறுமரர் | ௧௬௯ |
| நரர்கட்கிரை | ௧௬௮ | போயகுலமொடு | ௧௬௭ |

## ௧௨. நெந்துங்கழி நெடில்

| | | | |
|---|---|---|---|
| கட்டழகமைந்து | ௧௬௯ | நின்புகழ்பாடும் | ௧௭௧ |
| சிவமுடனமூர்த் | ௧௭௰ | பெருகுறுமன்பா | ௧௬௯ |
| தான்பெறுமழலை | ௧௭௰ | மனமெனும்வய | ௧௬௯ |
| திருகுறுமறுக் | ௧௭௰ | மூக்கிடையிரண் | ௧௭௰ |
| நிலங்கடந்த | ௧௬௯ | வங்கையர்முத் | ௧௭௧ |

## ௧௩. குறுங்கழி நெடில்

| | | | |
|---|---|---|---|
| அன்பினுக்கன் | ௧௭௨ | பிறவிமாமிடி | ௧௭௨ |
| ஆடுறவடியேன் | ௧௭௨ | பொன்செய்வாணி | ௧௭௧ |
| கண்ணுடைக்கு | ௧௭௨ | மூந்திருவினையுந் | ௧௭௧ |
| சரிப்பினுமொரு | ௧௭௨ | மெய்யுறுபிணிக் | ௧௭௨ |
| நினக்குறுகூறு | ௧௭௨ | மென்னிழற்றரு | ௧௭௧ |

## ௧௪. நிரஞ்சன மாலை

| | | | |
|---|---|---|---|
| அங்கையினெல்லி | ௧௭௩ | சத்தங்கலிங் | ௧௭௪ |
| அழியும்பொருள் | ௧௭௬ | சித்துநிரஞ்ச | ௧௭௩ |
| ஆனந்தவாரிதி | ௧௭௬ | தன்பொருளொன் | ௧௭௩ |
| இல்லான்புதல் | ௧௭௫ | துயிலினும்போகி | ௧௭௫ |
| உடம்புசதி | ௧௭௫ | நாகமெனவும் | ௧௭௪ |
| உருவஞ்சுவை | ௧௭௬ | நிரஞ்சனசூனிய | ௧௭௬ |
| உலகியறன்னை | ௧௭௬ | நில்லாதியங்கும் | ௧௭௫ |
| உறங்குதுமென் | ௧௭௪ | பழியாம்பிறர் | ௧௭௫ |
| என்னையறிதனி | ௧௭௩. | பாடுமவனுமொ | ௧௭௫ |
| ஒன்றிரண்டாய | ௧௭௪ | பிரமமுந்தானு | ௧௭௪ |
| ஓடுந்தனமும் | ௧௭௫ | மண்ணும்புனலு | ௧௭௪ |
| கண்ணிவிரவி | ௧௭௬ | யானூரடிமைசி | ௧௭௬ |
| காயங்காரணநற் | ௧௭௬ | வான்குறித்தெ | ௧௭௪ |
| குருவாகிமுத்தனு | ௧௭௬ | விடயங்களின | ௧௭௫ |
| குருவிற்குதவு | ௧௭௪ | வின்ளேன்சிறிய | ௧௭௬ |
| கோலந்தருமடி | ௧௭௪ | | |

## ௧௫. கைத்தலமாலை

| | | | |
|---|---|---|---|
| அன்னமாயும்வெண் | ௧௭௭ | தன்னைமேவிவ | ௧௭௭ |
| அன்னமூர்பவன் | ௧௭௭ | தன்னையோர்பெரு | ௧௭௮ |
| அன்னையாகியி | ௧௭௭ | பன்னுமாமறை | ௧௭௭ |
| கன்னலாரமு | ௧௭௭ | பின்னும்வார் | ௧௭௮ |
| தன்னைநேர்வ | ௧௭௭ | முன்னமாலய | ௧௭௭ |

## ௧௬. சிவநாம மகிமை

| | | | |
|---|---|---|---|
| இழிவுறுபுன் | ௧௭௯ | புல்லராயினும் | ௧௭௮ |
| எண்ணிநெஞ்சி | ௧௭௯ | முந்தையோர்சொன் | ௧௭௯ |
| சாந்திராயண | ௧௭௮ | வருந்தியாற்றி | ௧௭௯ |
| தீயநாளொடுகோ | ௧௭௯ | வில்லிதென்ன | ௧௭௮ |
| நாக்கினுனுநய | ௧௭௮ | வேதமாகமம் | ௧௭௮ |
| நீசரேனும்வா | ௧௭௯ | | |

## ௧௭. சிவஞானபாலைய சுவாமிகள் தாலாட்டு

| | | | |
|---|---|---|---|
| அகராதிமாவி | ௧௮௫ | உருவமுருவ | ௧௮௫ |
| அங்கநவவி | ௧௮௧ | ஊனேனுவுயிரோ | ௧௮௯ |
| அங்கம்புனே | ௧௮௬ | எங்கண்மல | ௧௮௯ |
| அங்கலிங்க | ௧௮௨ | எந்தைசிவசா | ௧௮௪ |
| அண்டமுழுது | ௧௮௯ | எல்லாக்கலே | ௧௮௪ |
| அந்தக்கரண | ௧௮௬ | என்றுநித்த | ௧௮௰ |
| அந்தச்சதா | ௧௮௫ | ஏகாங்கமே | ௧௮௰ |
| அந்தப்பிரா | ௧௮௰ | ஏருருந்தான் | ௧௮௬ |
| அப்பூதம்ப | ௧௮௫ | ஒண்மறையின் | ௧௮௬ |
| அமைத்தபரஞ் | ௧௮௫ | ஒழிந்தவங்க | ௧௮௫ |
| அரசமயம | ௧௮௪ | கஞ்சநரம்பு | ௧௮௧ |
| அருவாகிநின் | ௧௮௬ | கடத்தினுபா | ௧௮௫ |
| அவஞானம்போ | ௧௮௰ | கமனமழிந் | ௧௮௨ |
| அறியாதொருநா | ௧௮௪ | கயிலைமலைமே | ௧௮௪ |
| அற்பகலுமா | ௧௮௯ | காய்முதலாங் | ௧௮௧ |
| ஆகமுயிர்து | ௧௮௫ | கிரியைமனபா | ௧௮௪ |
| ஆங்காரமில் | ௧௮௨ | குசித்தமழிந் | ௧௮௨ |
| ஆசாரலிங்க | ௧௮௰ | குபுத்தியழிந் | ௧௮௨ |
| ஆணவத்தான் | ௧௮௫ | கூறுமனச்சுத் | ௧௮௫ |
| ஆதாரபீடங் | ௧௮௨ | கூறுமிவையா | ௧௮௨ |
| ஆர்க்குங்கொடு | ௧௮௬ | சம்பந்தன | ௧௮௪ |
| ஆறுமுகங்களு | ௧௮௨ | சாற்றுமியோகா | ௧௮௧ |
| இணையாதுமில் | ௧௮௯ | சீவந்திகழ் | ௧௮௪ |
| இந்தக்காயார்ப் | ௧௮௧ | சுத்தசித்த | ௧௮௨ |
| இம்மூறையாரு | ௧௮௨ | செப்பமுறவெ | ௧௮௬ |
| இம்மைமறுமை | ௧௮௪ | சோகியலேகிய | ௧௮௧ |
| உருத்திரனே | ௧௮௨ | ஞானதிருநின் | ௧௮௪ |
| உருவஞ்சுவை | ௧௮௨ | தங்குமிலிங் | ௧௮௫ |

## ௧௮. திருப்பள்ளியெழுச்சி



## ௧௯. பிள்ளைத் தமிழ்

---

## ௨௦. சிவஞானபாலைய சுவாமிகள் கலம்பகம்

முற்றிற்று.